second election. The reason for not filing the nomination is stated to be the dissatisfaction of the people of Nallampalayam area with the ward division and allocation of seats notified by the Regional Inspector of Municipal Councils and Local Boards, Tiruchirappalli, on the basis of which the elections were held to the Unjini Panchayat.

(c) Whenever requests are made for a revision of the wards and re-allocation of seats in sufficient time before the commencement of election proceedings to the panchayats, action is taken to comply with such requests as far as possible, to ensure smooth conduct of elections.

SRI S. RAMALINGA PADAYACHI : இந்தப் பஞ்சாயத்திலும், நல்லப்பாளயம் பஞ்சாயத்திலும் அதிகமான ஜனத்தொகை இருப்பதால் தலைவர் எந்த ஊரிலிருந்து வருவது என்று தீர்மானிக்க கஷ்டமாக இருக்கிறது. அதனால் உடனடியாக இந்த இரண்டு ஊர்களையும் வெவ்வேறாகப் பிரிப்பதற்கு கனம் அமைச்சர் அவர்கள் முயற்சிப்பாரா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அங்கு தலைவர் வருவதைப்பற்றிய தகராறுகள் இருப்பதாக இது வரையிலும் தகவல் வரவில்லை.

SRI K. VINAYAKAM : Sir, whenever revision of wards is taken up, is it not the function and duty of the revising authority to consult the existing panchayat council and public opinion and if so, may I know whether such a procedure was adopted in this case?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Generally it is done and in this case also, I expect it has been done.

*Appointment of Basic Trained Teachers as Gramasevaks*

*380 Q.—SRI T. S. RAMASWAMY PILLAI (on behalf of Sri T. Veluchamy) கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

வேலையில்லாத ஆதாரப் பயிற்சி பெற்ற ஆசிரியர்களைக் கிராம சேவக்குகளாக நியமனம் செய்யும் யோசனையைச் சர்க்கார் பரிசீலனை செய்தார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

*Kovilpatti Panchayat*

*381 Q.—SRI V. SUBBIAH : கனம் ஸ்தல-ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கோவில்பட்டி நகரை முனிசிபாலிடியாக்காமல் பஞ்சாயத்து போர்டாகவே வைத்திருப்பதின் நோக்கம் என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : It is proposed to take action under the provisions of the New Panchayat Act.

SRI V. SUBBIAH : கோவில்பட்டி ஒரு மேஜர் பஞ்சாயத்து. அங்கு ஜனத்தொகை அதிகமாக இருந்தும், வருமானம் 1¾ லட்சமாக இருந்தும், அதை ஒரு முனிசிபாலிட்டியாக ஆக்கவேண்டும் என்று அங்குள்ள பஞ்சாயத்து போர்டில் தீர்மானித்தும், அதற்கு அங்குள்ள மக்கள் மாறுமல்

16th February 1959]

இருந்தும், இன்னும் முனிசிபாலிட்டியாக மாற்றவில்லை. ஆனால் தென்காசி, சங்கரன்கோவில், கம்பம் போன்ற பிரதேசங்கள் குறைந்த வருமானம், குறைந்த ஜனத்தொகையுள்ள நகரங்களாக இருந்தும் அங்கே முனிசிபாலிட்டிகளை ஏற்படுத்தி இருப்பதன் காரணம் என்ன என்பதையும் கோவில்பட்டியை முனிசிபாலிட்டியாக மாற்றாமல் இருப்பதற்கும் என்ன காரணம் என்பதையும் கனம் அமைச்சர் அவர்கள் தெளிவாக விளக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : கோவில்பட்டியைப் பொறுத்த வரையில் இப்பொழுது நான் கொடுத்த பதிலிலிருந்து தெரியும். எப்பொழுது பஞ்சாயத்து ஆக்ட் அமுலுக்கு வருமோ அப்பொழுது அது எடுத்துக்கொள்ளப்படும் என்று சொன்னேன்.

*Women's Welfare Centres in Tirunelveli district.*

* 382 *Q.*—SRI T. S. RAMASWAMY PILLAI (on behalf of Sri T. Velucham ) : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா —

(அ) நெல்லை ஜில்லாவில் பெண்கள் நல செண்டர்களில் செய்யப்படும் பொருள்களை விற்பனை செய்வதற்காக ஜில்லா பெண்கள் நல அதிகாரியிடம் ஒதுக்கப்பட்டிருக்கிற தொகை எவ்வளவு ?

(ஆ) இந்தத் தொகையை அதிகப்படுத்துவதற்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) A sum of Rs. 300 is sanctioned as working capital for the purchase of raw material for the Women's Work Centres. The sale proceeds of the articles produced in the Centres are utilised for further purchase of raw materials.

(*b*) No, Sir.

*Anthrax*

* 383 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether cases of Anthrax have been reported in the North Arcot district recently ; and

(*b*) if so, the number of cattle and sheep affected ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) 67 Sheep and 3 cattle were affected.

SRI A. A. RASHEED : Sir is the Hon. Minister aware that cattle and sheep affected by anthrax should be burnt to prevent infection of the disease to other burnt animals and if so, were they burnt ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not have the information. But preventive measures on a large scale and preventive inoculations were done and the disease was controlled.

*Rearing of Fish*

* 385 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லாவிலே மீன் வளர்ப்பு இலாகாவுக்கு 1958–59-ஆம் வருஷத்திலே ஒதுக்கப்பட்ட தொகை எவ்வளவு ?